[29th March 1961

**Sri G. KRISHNAMOORTHY**: இலவசச் சாப்பாடு போடுவதற்கும் பணம் வாங்கிக் கொண்டு போடுவதற்கும் எந்த விதிப்படி மாணவர்கள் பிரிக்கப்படுகிறார்கள்?

**The Hon. Sri P. KAKKAN**: ஹரிஜன மாணவர்கள் 75 சதவிகிதம் இருக்கவேண்டும். 15 மாணவர்கள் பின் தங்கியவர்களாகவும், 10 பேர் முன்னேற்றம் அடைந்த சமூகத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கவேண்டும். முன்பு முன்னேற்றமடைந்த சமூகத்தினர் 3-ல் ஒரு பங்கு பணம் கொடுக்கவேண்டுமென்று அரசாங்கம் முடிவு செய்தது. இப்போது அது இல்லாமல் அவர்களும் வந்து ஹரிஜன மாணவர்களோடு இருப்பதற்கு வழி செய்திருக்கிறது.

**Dr. A. SREENIVASAN**: இலவச வசதிகள் பின்தங்கியவர்களுக்கு என்று ஏற்பட்டிருக்கிறதா? பாக்கி வகுப்பார்களில் சொத்து இல்லாமல் பலர் இருக்கலாம். அவர்களுக்கும் இது உபயோகப்படுமா?

**The Hon. Sri P. KAKKAN**: அதற்குத்தான் சொன்னேன். அவர்களுக்கும் 10 சதவிகிதம் கொடுக்கிறோம்.

**Sri V. M. SURENDRA RAM**: புது எம். சி. ராஜா ஹாஸ்டல் உபயோகத்திற்கு வரும்போது எவ்வளவு பேருக்கு இடம் கிடைக்கும்?

**The Hon. Sri P. KAKKAN**: எம். சி. ராஜா ஹாஸ்டலில் 111 மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று அரசாங்கம் உத்தரவு இட்டிருக்கிறது. ஹரிஜன மாணவர்கள் 97 பேர். புதிதாகக் கட்டப்படும் விடுதி சீக்கிரம் முடிந்துவிடும். அடுத்த வருஷ ஆரம்பத்தில் எல்லா மாணவர்களும் போவார்கள். 200 பேர் அதில் இருக்கலாம்.

**Sri V. M. SURENDRA RAM**: இப்போது புதிதாகக் கட்டப்படும் விடுதி எவ்வளவு பேருக்குத் தங்க வசதியுள்ளதாகத் திட்டம் போடப்பட்டிருக்கிறது?

**The Hon. Sri P. KAKKAN**: 200-க்கு என்றுதான் போட்டிருக்கிறார்கள்.

*Distribution of clothes*

* 222 Q.—Vidwan T. MUTHUKANNAPPAN: Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether it is a fact that the Harijan Welfare Department have distributed clothes to the Harijan girls in Harijan schools for Pongal, 1961; and

(*b*) if so, the number of girls in the schools, and the number of girls to whom clothes have been distributed?

The Hon. Sri P. KAKKAN: (*a*) Yes, Sir.

(*b*) Clothings have been distributed to all the 28,907 Harijan girl pupils reading in the Harijan Welfare Schools including those residing in Government Hostels of the Harijan Welfare Department.

29th March 1961]

**VIDWAN T. MUTHUKANNAPPAN :** இந்த ஹரிஜன நல பள்ளிகளில் ஹரிஜனர் அல்லாத மிகவும் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த குழந்தைகள்கூட படிக்கிறார்கள். அவர்களுக்கும் கூட (தக்கவர்களுக்கு) இத்தகைய உடைகள் கொடுக்க அரசாங்கம் யோசிக்குமா ?

**THE HON. SRI P. KAKKAN :** ஹரிஜன மாணவிகளுக்கு மட்டும்தான் கொடுக்க அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. அங்கத்தினர் சொன்ன ஆலோசனையைப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும்.

SRI G. KRISHNAMOORTHY : Were the Harijan boys given clothes and, if not, why not?

**THE HON. SRI P. KAKKAN :** ஹரிஜன மாணவர்களுக்கு அல்ல அது. மாணவிகளுக்கு மட்டும்தான்.

MR. CHAIRMAN : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—ANNOUNCEMENTS.

### (1) MESSAGE FROM THE ASSEMBLY.

MR. CHAIRMAN : I have received messages from the Deputy Speaker, Legislative Assembly, transmitting copies of the Madras Village Courts (Amendment) Bill, 1961 (L.C. Bill No. 2 of 1961) and the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961 (L.C. Bill No. 3 of 1961), as passed and agreed to by the Assembly without any amendments.

I have also received messages from the Deputy Speaker, Legislative Assembly, transmitting copies of the Madras General Sales Tax (Second Amendment) Bill, 1961 (L.A. Bill No. 15 of 1961) and the Madras (Added Territory) Extension of Laws Bill, 1961 (L.A. Bill No. 16 of 1961), as passed by the Assembly for the recommendations of the Council, certifying that the Bills are Money Bills within the meaning of Article 199 of the Constitution of India.

I have also received message from the Deputy Speaker, Legislative Assembly, transmitting a copy of the Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961), as passed by the Assembly, for the concurrence of the Council.

### (2) MESSAGE FROM THE GOVERNOR.

MR. CHAIRMAN : I have received message from the Governor of Madras recommending to the Legislative Council the consideration of the Madras Agricultural Income-tax (Extension to Added Territory) Bill, 1961 (L.A. Bill No. 23 of 1961).